உ

கணபதி துணை.

# நித்திய கருமவிதி

யாழ்ப்பாணத்து நல்லூர்

ஆறுமுக நாவலரவர்கள்

இயற்றியது.


**சரஸ்வதி புத்தகசாலை,**

175, செட்டியார் தெரு,

கொழும்பு.





பிரமாதீஸு சித்திரைமீ

உ

கணபதி துணை.

# நித்தியகருமவிதி

யாழ்ப்பாணத்து நல்லூர்

ஆறுமுகநாவலரவர்கள்

இயற்றியது.

இரண்டாம் பதிப்பு.

சரஸ்வதி புத்தகசாலை,
175, செட்டியார் தெரு,
கொழும்பு.

பிரமாதி௵ சித்திரை௴

மதுரை, விவேகாநந்தா அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பெற்றது.

உ

கணபதி துணை.

# நித்தியகருமவிதி.

---

சைவசமய மரபிலே பிறந்தவர் எல்லாரும் ஏழாம் வயசிலாவது, ஒன்பதாம் வயசிலாவது சமயதீக்ஷை பெற்று, அனுட்டானஞ் செவ்வையாகப் பழகிக்கொண்டு மரணபரியந்தம் விடாதுசெய்க.

நாடோறுஞ் சூரியோதயத்துக்கு முன்னே நித்திரை விட்டெழுந்து, சிவசிவ என்று நெற்றியில் விபூதிதரித்துக் கணபதயே நம என்று குட்டிக் குருப்பியோ நம என்றுகும்பிட்டுச் சிவபெருமானை இருதயத்திலே தியானித்து ஒரு தோத்திரமாவது சொல்லிக்கொள்க.

அதன்பின் எழுந்து, புறத்தேபோய் மலசல மோசனஞ்செய்து, சௌசம்பண்ணித் தந்தசுத்தி செய்து முகங் கழுவி, நெற்றியில் விபூதி இட்டுக்கொள்க.

நீர்நிலையை அடைந்து ஸ்நானஞ் செய்து, ஈரந் துவட்டி, நெற்றியில் விபூதி இட்டு, உலர்ந்த சுத்தவஸ்திரந் தரித்துக்கொள்க.

அநுட்டான பாத்திரத்தை வெள்ளையிட்டு அலம்பிச் சுத்தசலம் பூரித்துச் சுத்தபூமியிலே சிறிது சலம் விட்டு, அதன்மேற் பாத்திரத்தை வைத்துக் கிழக்கு முகமாகவேனும் வடக்கு முகமாகவேனும், இருந்து, விபூதி இட்டுக் கொண்டு அநுட்டானம் பண்ணுக.

வியாதியினாலே ஸ்நானஞ் செய்யமாட்டாதவர், கை கால் கழுவி, ஈர வஸ்திரத்தினால் உடம்பெங்குந் துடைத்து, உலர்ந்த சுத்த வஸ்திரத்தினால் ஈரந்துவட்டி, நெற்றியில் விபூதியிட்டு, வேறு உலர்ந்த சுத்த வஸ்திரந்தரித்து, ஆசமனஞ் செய்துகொண்டு, அநுட்டானம் பண்ணுக. அதுவுஞ் செய்யமாட்டாதவர், நெற்றியில் விபூதியிட்டுச் சிவபெருமானைத் தியானித்துச் சிவமூலமந்திரத்தை மனசிலே சிந்தித்துக் கொண்டு கிடக்க.

வீட்டுக்கு விலக்காயுள்ள பெண்கள், மூன்று நாளும் சிவமூலமந்திரத்தை மனசிலே சிந்தித்துக்கொண்டு நான்காம்நாள் ஸ்நானஞ்செய்து அநுட்டானம் பண்ணுக.

## மூலமந்திரம்.

சிவமூலமந்திரம் —நமசிவாய.

தேவிமூலமந்திரம்—உமாதேவ்யைநம.

விக்கினேசுரமூலமந்திரம்—கணபதயேநம.

சுப்பிரமணியமூலமந்திரம்—சரவணபவாயநம.
சூரியமூலமந்திரம்—சிவசூர்யாயநம.

## பதினொருமந்திரம்.

ஈசாநாயநம
தற்புருஷாயநம
அகோராயநம
வாமதேவாயநம
சத்தியோசாதாயநம
} இந்த ஐந்தும் பிரம மந்திரம்.

இருதயாயநம
சிரசேநம
சிகாயைநம
கவசாயநம
நேத்திரோப்பியோநம
அஸ்திராயநம
} இந்த ஆறும் அங்க மந்திரம்.

## ஆசமன மந்திரம்.

ஆத்துமதத்துவாயசுவதா
வித்தியாதத்துவாயசுவதா
சிவதத்துவாயசுவதா

---

உ

கணபதி துணை.

# அநுட்டானவிதி.

## பூமிசுத்தி.

**அஸ்திராயபடு** என்று தானிருக்கும் பூமியைச் சலத்துளியினாலே தெளிக்க.

## கணபதி குரு வந்தனம்.

**கணபதயே நம** என்று குட்டி,
**குருப்பியோ நம** என்று கும்பிடுக.

## சலசுத்தி

அநுட்டான சலத்தை,

**நமசிவாய** என்று வலக்கைச் சுட்டுவிரல் நடுவிரல்களை உள்ளே மடக்கிப் பெருவிரலுக்கும் அணிவிரலுக்கும் நடுவாக நிரீக்ஷணமும்,

**அஸ்திராயபடு** என்று பெருவிரனுதியையுஞ் சுட்டுவிரனுதியையுஞ் சேர்த்து ஒலியெழுப்புதலினாலே திக்குப்பந்தனமும்,

**கவசாய வௌஷடு** என்று நீட்டிய சுட்டுவிரலினாலே அவகுண்டனமுஞ் செய்க.

## ஆசமனம்.

ஆத்தும தத்துவாய சுவதா
வித்தியா தத்துவாய சுவதா
சிவதத்துவாய சுவதா

என்று பெருவிர லடியிற் சார்ந்த உழுந்தமிழ்ந்து சலத்தினால் ஆசமனஞ்செய்து,

**அஸ்திராயபடு** என்று அதரங்களிரண்டையும் பெருவிரலடி கொண்டு இடமாக இரண்டுதரமும் உள்ளங்கை கொண்டு கீழாக ஒரு தரமுந்துடைத்துக் கை கழுவி,

**இருதயாய வௌஷடு** என்று பெருவிரலோடு கூடிய அணி விரலினாலே முகம், வலமூக்கு, இடமூக்கு, வலக் கண். இடக்கண், வலக்காது, இடக்காது, கொப் பூழ், மார்பு, வலத்தோள், இடத்தோள், சிரசு, என்னும் இப்பன்னிரண்டிடங்களையுந் தொட்டு விடுக.

---

## விபூதி சுத்தி.

விபூதியை வலக்கைப் பெருவிரல் நடுவிரல் அணிவிரல் களால் எடுத்து, இடக்கையில் வைத்துக்கொண்டு,

**அஸ்திராய படு** என்று விபூதியிலே சலத்தைத் தெளித்து, அவ்விபூதியில் ஒரு சிறு பங்கைப் பெருவிரல் அணிவிரல்களினாலே தொட்டு,

**அஸ்திராய உம் படு** என்று இராக்ஷதர் பொருட்டு நிருதி மூலையிலே தெறித்து, விபூதியை

**நமசிவாய** என்று நிரீக்ஷணமும்,

**அஸ்திராய்படு** என்று திக்குப்பந்தனமும்,

**க்வசாய வௌஷடு** என்று அவகுண்டனமுஞ்செய்து, வலக் கையால் மூடிக்கொண்டு,

**ஈசாநாய நம** என்பது முதலிய பதினொரு மந்திரத்தாலும் அபிமந்திரிக்க.

---

## விபூதிஸ்நானம்.

வலக்கையின் பெருவிர லணிவிரல்களால் விபூதித் தூளியை எடுத்து

**அஸ்திராய படு** என்று தலைதொடங்கிக் காலளவும் பூசி, இடக்கையில் உள்ள விபூதியைப் பெருவிரலோடு கூடிய நடுவிரலினாலே

**இருதயாய நம** என்று சிரசிலும்,

**க்வசாய வௌஷடு** என்று குழைத்து, நடுவிரன் மூன்றி னும்

**ஈசாநாயநம** என்று சிரசிலும்,

**தற்புருஷாய நம** என்று நெற்றியிலும்,

**அகோராய நம** என்று மார்பிலும்,

**வாமதேவாய நம** என்று கொப்பூழிலும்

**சத்தியோ சாதாய நம** என்று வலமுழந்தாள் இடமுழந் தாள், வலப்புயம், இடப்புயம், வலமுழங்கை, இட முழங்கை, வலமணிக்கட்டு, இடமணிக்கட்டு, வலவிலா, இடவிலா, முதுகு கழுத்து என்னும் மற் றையிடங்களிலுந் திரிபுண்டரமாகத் தரிக்க.

## மந்திரஸ்நானம்

எஞ்சிய விபூதியோடு கைநிறையச் சலம்விட்டுக் கும்பக முத்திரையாகப் பிடித்துக்கொண்டு,

ஈசாநாய நம என்பது முதலிய ஐந்து மந்திரத்தை உச்சரித்துச் சிரசிலேபுரோக்ஷித்துவிட்டுக்கை கழுவுக.

---

## ஆசமனம்.

முன்போல ஆசமனஞ் செய்க.

---

## பிராணாயாமம்.

வலக்கையிற் சுட்டுவிரலையும் நடுவிரலையும் உள்ளே மடக்கிப் பெருவிரலினால் வல மூக்கைப் பிடித்துக்கொண்டு ஒருதரமும், பெருவிரலணிவிரல்களினால் வல இட மூக்குக்களைப் பிடித்துக்கொண்டு ஒருதரமும், அணி விரலினால் இடமூக்கைப் பிடித்துக்கொண்டு ஒருதரமுமாக,

ஈசாநாய நம என்பது முதலிய பதினொரு மந்திரத்தை மூன்றுதரம் உச்சரித்து,

நமசிவாய என்று வலக்காதை பொத்துக.

---

## சிவதீர்த்தகரணம்.

இருதயாய வௌஷடு என்று புருவ நடுவில் உள்ளஅமிர்தத்தை நுதிவளைந்த சுட்டுவிரலினாலே எடுத்துச் சலத்தினிடத்தே வைத்து,

நமசிவாய என்று அபிமந்திரித்து,

**அஸ்திராயபடு** என்று திக்குப்பந்தனமும்,
**கவசாயவௌஷடு** என்று அவகுண்டனமுஞ் செய்க.

---

### மந்திராபிஷேகம்

வலக்கையினாற் சலத்தை அள்ளி இடக்கையில் விட்டுக் கும்பக முத்திரையாகப் பிடித்துக்கொண்டு,

**ஈசாநாய நம** என்பது முதலிய பதினொருமந்திரத்தை உச்சரித்துச் சிரசிலே புரோக்ஷிக்க.

---

### மார்ச்சனம்.

சலத்தை வலக்கையான் மூடி,
**ஈசாநாயநம** என்பது முதலிய பதினொரு மந்திரத்தினால் அபிமந்திரித்து, வலக்கையினாலே சலத்தை எடுத்து இடக்கையில் விட்டு வைத்துக்கொண்டு, அவ்விடக்கையி னின்றுங் கீழே ஒழுகுகின்ற சலத்தை வலக்கையினாலே

**ஈசாநாய வௌஷடு** என்பது முதலிய பதினொரு மந்திரத்தினாலே சிரசின்மேலே தெளித்துவிடுக.

---

### அகமர்ஷணம்.

எஞ்சிய சலத்தை இடக்கையினின்றும் வலக்கையில் விட்டு, மூக்குக்குச் சமீபத்திலே பிடித்துக் கொண்டு, அந்தச்சலம் வெண்ணிறமுடைய தருமவடிவாகி இடமூக்கினாலே உள்ளே புகுந்து அங்குள்ளபாவத்தை அழித்ததாகவும்,

அந்தப்பாவம் மைக்குழம்புபோல வலமூக்கினாலே புறத்தே நீங்கிக் கையில்வந்த தாகவும் பாவித்து, வலக்காற் பெருவிரலிற் சுவாலிக்கும்அக்கினியிலே

அஸ்திராய உம் படு என்று புருவமுரிப்புடனே விட்டு, அந்தப்பாவஞ் சாம்பரானதாகப் பாவித்து,

அஸ்திராய படு என்று கைகழுவுக.

---

## ஆசமனம்.

முன்போல ஆசமனஞ் செய்க.

---

## கவசவேஷ்டனம்.

கவசாய வௌஷடு என்று வலக்கையிற் சலத்தினாலே தன்னை வலமாகச் சுற்றுக.

---

## தருப்பணம்.

இரண்டு கையுநிறைந்த சலத்தினாலே

நமசிவாய என்று மூன்றுதரந் தருப்பணஞ்செய்து,

நமசிவாய என்று பத்துத்தரஞ் செபித்து,

நமசிவாய என்று மீட்டும் ஒருதரந்தருப்பணஞ்செய்து

ஈசாநாய சுவாகா என்பது முதலிய பதினொரு மந்திரத்தினால் ஒருதரந் தருப்பணஞ் செய்து,

உமாதேவ்யை சுவாகா என்றும்,

கணபதயே சுவாகா என்றும்,

சரவணபவாய சுவாகா என்றும் ஒவ்வொருதரந் தருப்பணஞ் செய்க.

## ஆசமனம்.

முன்போல ஆசமனஞ் செய்க.

---

## தீர்த்தோபசங்காரம்.

முன்னே சலத்திலே வைத்த அமிர்தத்தை,
**இருதயாய வௌஷடு** என்று நுதிவளைந்த சுட்டுவிரலினால் எடுத்துப் புருவநடுவிலே ஒடுக்கிவிடுக.

---

## சூரியோபஸ்தானம்.

இரண்டுகை நிறையச் சலம்விட்டுப் பிடித்துக்கொண்டு,
**ஈசாநாய நம** என்பது முதலிய பதினொரு மந்திரத்தை உச்சரித்து
**சிவசூரியாய சுவர்கா** என்று ஒருதாரந்தருப்பணஞ்செய்க.

---

**அஸ்திராயபடு** என்று தான் இருக்கும் பூமியைச் சலத்தினாலே புரோக்ஷித்து,
வடக்குமுகமாக ஆசனத்திருந்து, முன்போலக் குட்டிக் கும்பிட்டுப் பிராணாயாமஞ் செய்து சிவபெருமானுடைய உருவத்திருமேனியாகிய உருத்திரவடிவத்தைத் தியானிக்க.

---

## உருத்திரத்தியானம்

மைக்களமு மான்மழுவும் வரதமுடனபயமுறு,மெய்க்கரமு
நாற்புயமும் விளங்குபணிக் கொடும்பூணுஞ்செக்கருறு
மதிச்சடையுஞ் சேயிழையோர்பாகமுமாய் முக்கணிறை
யாங்காண முன்னின்றே யருள்புரிந்தான்.

இப்படித் தியானித்துக்கொண்டு, சிவமூலமந்திரத்தை நூற்றெட்டுத்தரமும், தேவிமூலமந்திரம் கணபதிமூலமந்திரம் சுப்பிரமணிய மூலமந்திரம் என்னும் இவைகளைத் தனித்தனியே பத்துத்தரமுஞ்செபித்துப் பின்பு முன்போலக் குட்டிக் கும்பிட்டுப்பிராணாயாமஞ் செய்து தோத்திரம் பண்ணுக.

---

## சிவஸ்தோத்திரம்.

முடிகொண்ட மத்தமுமுக்கண்ணினேக்கு முறுவலிப்புந், துடிகொண்டகையுந் துதைந்தவெண்ணீறுஞ் சுரிகுழலாள், படிகொண்டபாகமும் பாயும்புலித்தோலுமென்பாவி நெஞ்சிற், குடிகொண்டவாதில்லையம்பலக்கூத்தன் குரைகழலே.

கடையவனேனைக் கருணையினாற்கலந் தாண்டுகொண்ட, விடையவனே விட்டிடுதிகண்டாய் விறல்வேங்கையின்றோல், உடையவனே மன்னுமுத்தரகோசமங்கைக்கரசே, சடையவனே தளர்ந்தேனெம்பிரானென்னைத்தாங்கிக் கொள்ளே.

வேதநாயகனேபோற்றிவிண்ணவர்தலைவாபோற்றி
மாதொருபாகாபோற்றி மறுசமயங்கண்மாளப்
பேதகஞ்செய்வாய் போற்றி பிஞ்ஞகா போற்றியான்செய்
பாதமனைத்துந் தீர்க்கும் பராபராபோற்றிபோற்றி.

சீராருஞ்சதுர்மறையுந் தில்லைவாழந்தணரும்
பாராரும்புலிமுனியும் பதஞ்சலியுந் தொழுதேத்த
வாராருங்கடல் புடைசூழ்வைய மெலாமீடேற
ஏராருமணிமன்றுளெடுத்ததிருவடி போற்றி.

## தேவிஸ்தோத்திரம்

பரந்தெழுந்தசமண்முதலாம் பரசமயவிருணீங்கச்
சிரந்தழுவுசைவநெறித்திருநீற்றினொளிவிளங்க
அரந்தைகெடப்புகலியர்கோனமுதுசெயத்திருமுலைப்பால்
சுரந்தளித்தசிவகாமசுந்தரிபூங்கழல்போற்றி.

## விநாயகஸ்தோத்திரம்.

திருவுங் கல்வியுஞ் சீருந்தழைக்கவுங்
கருணை பூக்கவுந் தீமையைக் காய்க்கவும்
பருவ மாய்நம துள்ளம் பழுக்கவும்
பெருகு மாழத்துப் பிள்ளையைப்பேணுவாம்

## சுப்பிரமணியஸ்தோத்திரம்.

மூவிருமுகங்கள்போற்றி முகம்பொழிகருணைபோற்றி
ஏவருந்துதிக்கநின்றவீராறுதோள்போற்றிகாஞ்சி
மாவடிவைகுஞ்செவ்வேள்மலரடிபோற்றியன்னான்
சேவலுமயிலும்போற்றி திருக்கைவேல்போற்றிபோற்றி.

## சமயகுரவர் நால்வர் தோத்திரம்.

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல் போற்றி, ஆழிமிசைக் கன்மிதப்பி லணைந்தபிரா னடி போற்றி, வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம் போற்றி, ஊழிமலி திருவாதவூரர் திருத்தாள் போற்றி.

## அறுபத்துமூவர் தோத்திரம்.

தத்துமூதெயின் மூன்றுந் தழலெழ
முத்துமூரன் முகிழ்த்த நிராமய

சித்துமூர்த்திதன் ருளினை சேராறு
பத்துமூவர் பதமலர் போற்றுவாம்.

இப்படித் தோத்திரம்பண்ணி எழுந்து,

இந்திராய நம என்று கிழக்கிலும்,
அக்நயே நம என்று தென்கிழக்கிலும்,
யமாய நம என்று தெற்கிலும்,
நிருதயே நம என்று தென்மேற்கிலும்,
வருணாய நம என்று மேற்கிலும்,
வாயுவே நம என்று வடமேற்கிலும்,
குபேராய நம என்று வடக்கிலும்;
ஈசாநாய நம என்று வடகிழக்கிலும் கும்பிட்டு,

பார்வதீசமேத பரமேசுவராய நம என்று வடக்குநோக்கி மூன்றுதரஞ் சாட்டாங்கமாக நமஸ்கரித்து, எழுந்து ஆசமனஞ்செய்க.

அஸ்திராயபடு என்று இருக்குமிடத்தைச் சலத்தினாற் றெளித்து, அதனைத்தொட்டுக் கண்ணிலொற்றிக் கொண்டு சலத்தைத் தூரத்திலேகால்படாவிடத்தில் விட்டுவிடுக.

அனுட்டானவிதி முற்றிற்று.

---

## சூரியநமஸ்காரவிதி.

சூரிய மண்டலத்தைத் தரிசித்து, வெண்டாமரைப்பூவின் மேலே செவ்வொளியையுடைய வட்டமண்டலத்தினடுவேஉள்ளவராய், மாதுளம்பூ நிறத்தினராய் ஒரு திருமுகமும் இரண்டுதிருக்கண்ணும் இரண்டு

திருப்புயத்தினும்பொருந்திய அலர்ந்த வெண்டாமரைப்பூ நாளம் இரண்டுபிடித்த இரண்டு திருக்கையும் உடையவராய்ச் சிவந்த வஸ்திரந்தரித்தவராய் உள்ள சூரிய மூர்த்தியைத் தியானித்து,

**சிவசூரியாயநம** என்று செந்தாமரைப்பூ முதலிய செம்பூக்களைத் தூவி,

பேசிடுவெண்டாமரையாசனனாகிச்சிவந்த
    பேரொளிசேர்தருவிருத்தமண்டலத்தியனாய்
ஆசறுமாதுளுங்கமலர்போலுநிறத்தினனாய்
    அலர்ந்தனவாயிருபுயங்களடைந்தவெண்டாமரையின்
காசறு நாளம்பிடித்தகையிரண்டினோடு
    கருதுமொருமுகமிரண்டுகண்களுடையவனாய்த்
தேசுமலிசெய்யவுடைதனையுடுத்தோனாகித்
    திகழ்சிவசூரியனைநிதஞ்சிந்தனைசெய்திடுவாம்

விளங்குதண்டிமுதலோராற்சேவிக்கப்படுவோன்
    விமலன்முதனாற் சிங்கபதாசனத்தின்மேலோன்
களங்கமிலாத்தீத்தைமுதற்சத்திகணசகிதன்
    கருதருணமணியொளியன்கடோற்கான் மமூர்த்தி
துளங்கலிறன்னங்கந்தன்னங்கமெனுங்கிரகந்
    தொகுமுடுவாதியசூழச்சுவேதகஞ் சத்திவர்ந்தோன்
வளங்கொள்சுவேதாம்புசத்தோட்கானிருநல்விழியோன்
    வருசிவசூரியன்காக்கமகிழ்ந்தடியேங்களையே.

என்று தோத்திரம்பண்ணி, இரண்டுதரம் ஆன்மப் பிரதக்ஷிணஞ்செய்து,

| | |
|---|---|
| வைகர்த்தனய நம | லோகசாக்ஷிணே நம |
| விவஸ்வதே நம | திரிவிக்கிரமாய நம |
| மார்த்தாண்டாய நம | ஆதித்தியாய நம |
| பாஸ்கராய நம | மகாசூரியாய நம |
| ரவயே நம | அம்சுமாலினே நம |
| லோகப்பிரகாசாய நம | திவாகராய நம |

என்னும் பன்னிரண்டு திருநாமத்தைச்சொல்லிப் பன்னிரண்டு நமஸ்காரஞ்செய்து, எழுந்து கும்பிட்டு, விரும்பிய வரங்களை வேண்டிக்கொள்க.

---

## கோபூசாவிதி.

| | |
|---|---|
| கபிலே நந்தே நம | கபிலே சுசீலே நம |
| கபிலே பத்திரே நம | கபிலே சுமநசே நம |

என்றுபசுவைப்பூசித்து அதற்கு ஒருபிடி புல்லுக்கொடுக்க.

---

## போசனவிதி.

அன்னம்பாலிக்குந் தில்லைச்சிற்றம்பலம்
பொன்னம்பாலிக்கும் மேலுமிப்பூமிசை
என்னம்பாலிக்கு மாறுகண்டின்புற
இன்னும்பாலிக்கு மோவிப்பிறவியே.

என்னுந் தேவாரத்தை மனசினலாவது வாக்கினலாவது உச்சரித்துக்கொண்டு,

**அஸ்திராயபடு** என்று வலக்கைவிரலினுல் அன்னத்தின் மேலே சலம் புரோக்ஷித்து,

**சிவதருப்பியோ நைவேத்தியம் சுவாகா** என்று சிவபெருமானுக்குங் குரவருக்கும் நிவேதனஞ்செய்து, வலவுள்ளங்கையிலே சலத்தை விட்டு,

**ஈசாநாய சுவாகா** என்று அந்த அன்னத்தைச்சுற்றி, எஞ்சிய உழுந்தமிழ்ந்து சலத்தை

**தற்புருஷாய சுவாகா** என்று ஆசமனஞ்செய்து, அன்னத்தைப் பிசைந்து,

**அஸ்திராய உம் படு** என்று உதராக்கினியைச்சொலிப்பித்து,

**நமசிவாய** என்று மனசிலே சிந்தித்து, அந்தச் சிந்தனையோடு போசனஞ்செய்துகொண்டெழுந்து, புறத்தே போய்க் கையிரண்டுங் கழுவிச் சலம்வாயிலேகொண்டு இடப்பக்கத்திலே கொப்பளித்துக் கைகால் கழுவி, நெற்றியிலே சிவ சிவ என்று விபூதி இட்டுக்கொள்க.

இரவிலே போசனம்பண்ணும்பொழுது விளக்கவிந்தால் போசனம்பண்ணுது அவ்வன்னத்தைவலக்கையினுலே மூடிவிளக்கேற்றிவரும்வரையும் சிவமூலமந்திரத்தை மனசிலே சிந்தித்துக்கொண்டிருந்து, விளக்கேற்றி வந்தபின் போசனம் பண்ணுக.

திருச்சிற்றம்பலம்.

---

# திருஞான சம்பந்த சுவாமிகள் அருளிச்செய்த,

# திருநீற்றுப்பதிகம்.

பண்—காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மந்திரமாவது நீறு வானவர்மேலது நீறு
சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு
தந்திரமாவது நீறு சமயத்திலுள்ளது நீறு
செந்துவர்வாயுமைபங்கன் றிருவால வாயான்றிரு நீறே.

வேதத்திலுள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு
போதந்தருவது நீறு புன்மைதவிர்ப்பது நீறு
ஓதத்தகுவது நீறு வுண்மையிலுள்ளது நீறு
சீதப்புனல்வயல்சூழ்ந்ததிருவாலவாயான்றிரு நீறே. (2)

முத்திதருவது நீறு முனிவரணிவது நீறு
சத்தியமாவது நீறு தக்கோர்புகழ்வது நீறு
பத்திதருவது நீறு பாரவினியது நீறு
சித்திதருவது நீறு திருவாலவாயான்றிரு நீறே. (3)

# திருநீற்றுப்பதிகம்.

காணவினியது நீறு கவினைத்தருவது நீறு
பேணியணிபவர்க்கெல்லாம் பெருமைகொடுப்பது நீறு
மாணந்தகைவது நீறு மதியைத்தருவது நீறு
சேணந்தருவது நீறு திருவாலவாயான்றிரு நீறே. (4)

பூசவினியது நீறு புண்ணியமாவது நீறு
பேசவினியது நீறு பெருந்தவத்தோர்களுக்கெல்லாம்
ஆசை கொடுப்பது நீறு வந்தமதாவது நீறு
தேசம் புகழ்வது நீறு திருவாலவாயான்றிரு நீறே. (5)

அருத்தமதாவது நீறு வவலமறுப்பது நீறு
வருத்தந்தணிப்பது நீறு வானமளிப்பது நீறு
பொருத்தமதாவது நீறு புண்ணியர்பூசும் வெண்ணீறு
திருத்தகுமாளிகை சூழ்ந்த திருவாலவாயான்றிரு நீறே.

எயிலதுவட்டது நீறு விருமைக்குமுள்ளது நீறு
பயிலப்படுவது நீறு பாக்கியமாவது நீறு
துயிலைத்தடுப்பது நீறு சுத்தமதாவது நீறு
அயிலைப்பொலிதருசூலத்தாலவாயான்றிரு நீறே. (7)

இராவணன்மேலது நீறு வெண்ணத்தகுவது நீறு
பராவணமாவது நீறு பாவமறுப்பது நீறு
தராவணமாவது நீறு தத்துவமாவது நீறு
அராவணங்குந்திருமேனியாலவாயான்றிரு நீறே. (8)

மாலொடயனறியாதவண்ணமுமுள்ளது நீறு
மேலுறை தேவர்கடங்கண்மெய்யதுவெண் பொடி நீறு
ஏலவுடம்பிடர்தீர்க்கு மின்பந்தருவது நீறு
ஆலமதுண்டமிடற்றெம் மாலவாயான்றிரு நீறே. (9)

குண்டிகைக்கையர்களோடுசாக்கியர் கூட்டமுங்கூடக்
கண்டிகைப்பிப்பது நீறு கருதவினியது நீறு
எண்டிசைப்பட்ட பொருளாரேத்துந்தகையது நீறு
அண்டத்தவர் பணிந்தேத்து மாலவாயான்றிரு நீறே. (10)

ஆற்றலடல்விடையேறு மாலவாயான்றிரு நீற்றைப்
போற்றிப்புகலிநிலாவும் பூசுரன் ஞானசம்பந்தன்
தேற்றித் தென்னனுடலுற்ற தீப்பிணியாயினதீரச்
சாற்றியபாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர்தாமே. (11)

திருச்சிற்றம்பலம்.

## திருஞான சம்பந்த சுவாமிகள்
## அருளிச்செய்த,
# நமச்சிவாயத்திருப்பதிகம்.



பண்—கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

காதலாகிக்கசிந்து கண்ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக்குய்ப்பது
வேதநான்கினுமெய்ப் பொருளாவது
நாதனும நமச்சிவாயவே. (1)

நம்பு வாரவர்நாவின விற்றினல்
வம்பு நாண்மலர் வார்மது வொப்பது
செம்பொனார்திலகம் முலகுக்கெலாம்
நம்பனும நமச்சிவாயவே. (2)

நெக்குளார்வமிகப்பெருகிந்நினைந்
தக்குமாலை கொடங்கையிலெண்ணுவார்
தக்க வானவராத்தகுவிப்பது
நக்கனுமநமச்சிவாயவே. (3)

இயமன்றூதருமஞ்சுவரின் சொலால்
நயம்வந்தோதவல்லார்தமைநண்ணிஞல்
நியமந்தானினைவார்க்கினியானெற்றி
நயனஞம நமச்சிவாயவே. (4)

கொல்வாரேனுங் குணம்பல நன்மைகள்
இல்லாரேனுமியம்புவராயிடின்
எல்லாத்தீங்கையு நீங்குவரென்பரால்
நல்லார் நாமநமச்சிவாயவே. (5)

மந்தரம் மனபாவங்கண் மேவிய
பந்தனையவர்தாமும் பகர்வரேல்
சிந்தும் வல்வினைசெல்வமுமல்குமால்
நந்திநாமநமச்சிவாயவே. (6)

நரகமேழ்புக நாடினராயினும்
உரைசெய்வாயினராயினுருத்திரர்
விரவியே புகுவித்திடுமென்பரால்
வரதனுமநமச்சிவாயவே. (7)

இலங்கை மன்னனெடுத்த வடுக்கன்மேல்
தலங்கொள்கால் விரல்சங்கரனூன்றலும்
மலங்கிவாய் மொழி செய்தவனுய்வகை
கலங்கொணுமநமச்சிவாயவே. (8)

போதன் போதன கண்ணனு மண்ணறன்
பாதந்தான் முடி நேடியபண்பராய்
யாதுங்காண்பரிதாகியலந்தவர்
ஓது நாமநமச்சிவாயவே. (9)

கஞ்சிமண்டையர்கையிலுண்கையர்கள்
வெஞ்சொன்மிண்டர்விரவிலரென்பரால்
விஞ்சையண்டர்கள் வேண்டவமுது செய்
நஞ்சுகள் கண்டனமச்சிவாயவே. (10)

நந்திநாமநமச்சிவாயவெனும்
சந்தையாற்ற மிழ்ஞானசம்பந்தன் சொல்
சிந்தையான் மகிழ்ந்தேத்தவல்லா ரெலாம்
பந்த பாசமறுக்கவல்லார்களே. (11)

திருச்சிற்றம்பலம்.



திருநாவுக்கரசு சுவாமிகள்

அருளிச்செய்த

# நமச்சிவாயத் திருப்பதிகம்.



(பண்—காந்தார பஞ்சமம்)

திருச்சிற்றம்பலம்.

சொற்றுணை வேதியன் சோதிவானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணையாவது நமச்சிவாயவே.

பூவினுக் கருங்கலம் பொங்குதாமரை
ஆவினுக் கருங்கல மரனஞ் சாடுதல்
கோவினுக் கருங்கலங் கோட்டமில்லது
நாவினுக் கருங்கல நமச்சிவாயவே.

விண்ணுற வடுக்கிய விறகின் வெவ்வழல்
உண்ணிய புகிலவை யொன்று மில்லையாம்
பண்ணிய வுலகினிற் பயின்ற பாவத்தை
நண்ணிநின் றறுப்பது நமச்சிவாயவே.

# நமச்சிவாயத் திருப்பதிகம்.

இடுக்கண் பட்டிருக்கினு மிரந்தி யாரையும்
விடுக்கிற் பிரானென்று வினவுவோ மல்லோம்
அடுக்கற்கீழ்க் கிடப்பினு மருளினுமுற்ற
நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சிவாயவே.

வெந்தநீ றருங்கலம் விரதிகட்கெலாம்
அந்தணர்க்கருங்கல மருமறையாறங்கம்
திங்களுக்கருங்கலந் திகழுநீண்முடி
நங்களுக்கருங்கல நமச்சிவாயவே.

சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க்கலால்
நலமில னொடொறு நல்குவானலன்
குலமிலராகிலுங் குலத்துக்கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சிவாயவே.

வீடினுருலகினில் விழுமிய தொண்டர்கள்
கூடின ரந்நெறி கூடிச்சென்றலும்
ஓடினேனோடிச் சென்றுருவங் காண்டலும்
நாடினேனாடிற்றுநமச்சிவாயவே.

இல்லக விளக்கது விருள் கெடுப்பது
சொல்லக விளக்கது சோதியுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சிவாயவே.

முன்னெறியாகிய முதல்வன் முக்கணன்
தன்னெறியேசரணுதறிண்ணமே
அந்நெறியே சென்றங் கடைந்தவர்க்கெலாம்
நன்னெறியாவது நமச்சிவாயவே.

மாப்பிணை தழுவிய மாதொர் பாகத்தன்
பூப்பிணை திருந்தடி பொருந்தக் கைதொழ
நாப்பிணை தழுவிய நமச்சிவாயப்பத்
தேத்தவல்லார் தமக் கிடுக்கணில்லையே.

திருச்சிற்றம்பலம்.





# திருஞான சம்பந்த சுவாமிகள்
அருளிச்செய்த
# கோளறு திருப்பதிகம்.



(பண்–பியந்தைக் காந்தாரம்)

**திருச்சிற்றம்பலம்.**

வேயுறுதோளி பங்கன் விடமுண்டகண்டன்
மிக நல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமேலணிந்தெ
னுளமே புகுந்த வதனல்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி
சனி பாம்பிரண்டுமுடனே
ஆசறு நல்ல நல்ல வவை நல்ல நல்ல
வடியாரவர்க்கு மிகவே. (1)

என்பொடு கொம்பொடாமை யிவை மார்பிலங்க
வெருதேறி யேழையுடனே
பொன்பொதிமத்தமாலை புனல்சூடி வந்தெ
னுளமே புகுந்த வதனல்

ஒன்பதொடொன்றொடேழு பதினெட்டொடாறு
முடனாய நாள்களவைதாம்
அன்பொடு நல்ல நல்ல வவை நல்ல நல்ல
வடியாரவர்க்குமிகவே. (2)

உருவளர் பவளமேனி யொளிநீறணிந்து
வுமையோடும் வெள்ளை விடைமேல்
முருகலர் கொன்றை திங்கண் முடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனால்
திருமகள் கலையதூர்திசெயமாது பூமி
திசை தெய்வமானபலவும்
அருநெதி நல்ல நல்ல வவைநல்ல நல்ல
வடியாரவர்க்குமிகவே. (3)

மதிநுதன் மங்கையோடு வடபாலிருந்து
மறையோது மெங்கள் பரமன்
நதியொடு கொன்றை மாலை முடிமேலணிந்தெ
னுளமே புகுந்த வதனால்
கொதியுறுகாலனங்கி நமனோடு தூதர்
கொடுநோய்களான பலவும்
அதிகுண நல்ல நல்ல வவைநல்ல நல்ல
வடியாரவர்க்குமிகவே. (4)

நஞ்சணிகண்ட னெந்தை மடவாடனோடும்
விடையேறுநங்கள் பரமன்
துஞ்சிருள் வன்னி கொன்றை முடிமேலணிந்தெ
னுளமே புகுந்தவதனால்
வெஞ்சினவ வுணரோடுமுருமிடியு மின்னு
மிகையானபூதமவையும்
அஞ்சிடுநல்ல நல்ல வவைநல்ல நல்ல
வடியாரவர்க்குமிகவே. (5)

வாள்வரிய தளதாடை வரிகோவணத்தர்
மடவாடனோடுமுடனாய்
நாண்மலர்வன்னிகொன்றை நதிசூடிவந்தெ
னுளமேபுகுந்தவதனால்
கோளரிபுழுவையோடு கொலையானை கேழல்
கொடுநாகமோடு கரடி
ஆளரிநல்ல நல்ல வவைநல்ல நல்ல
வடியாரவர்க்குமிகவே. (6)

செப்பிளமுலைநன்மங்கை யொருபாகமாக
விடையேறுசெல்வனடைவார்

ஒப்பிளமதியுமப்புமுடிமேலணிந்தெ
    னுளமேபுகுந்தவதனால்
வெப்பொடுகுளிரும்வாதமிகையானபித்தும்
    வினையானவந்துநலியா
அப்படிநல்ல நல்ல வவைநல்ல நல்ல
    யடியாரவர்க்கு மிகவே. (7)

வேள்பட விழிசெய்தன்று விடைமேலிருந்து
    மடவாடனோடுமுடனாய்
வாண்மதி வன்னிகொன்றை மலர்சூடிவந்தெ
    னுளமேபுகுந்தவதனால்
ஏழ்கடல் சூழிலங்கையரையன்றனோடு
    மிடரானவந்துநலியா
ஆழ்கடனல்ல நல்ல வவைநல்ல நல்ல
    வடியாரவர்க்குமிகவே (8)

பலபல வேடமாகும் பரனாரிபாகன்
    பசுவேறுமெங்கள் பரமன்
சலமகளோடெருக்கு முடிமேலணிந்தெ
    னுளமேபுகுந்தவதனால்
மலர்மிசையோனுமாலுமறையோடு தேவர்
    வருகாலமானபலவும்

அலைகடன் மேருநல்லவவைநல்ல நல்ல
வடியாரவர்க்குமிகவே. (9)

கொத்தலர் குழலியோடு விசயற்கு நல்கு
குணமாயவேட விகிர்தன்
மத்தமு மதியுநாகமுடிமேலணிந்தெ
னுளமே புகுந்தவதனால்
புத்தரொடமணைவாதிலழிவிக்குமண்ண
றிருநீறு செம்மைதிடமே
அத்தகுநல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே. (10)

தேனமர்பொழில்கொளாலை விளைசெந்நெறுன்னி
வளர்செம்பொனெங்குநிகழ
நான்முகனாதியாயபிரமாபுரத்து
மறைஞான ஞானமுனிவன்
தானுறுகோளுநாளுமடியாரைவந்து
நலியாதவண்ணமுரைசெய்
ஆனசொன்மாலையோதுமடியார்கள்வானி
லரசாள்வராணைநமதே. (11)

திருச்சிற்றம்பலம்.

# விநாயகர் தோத்திரக் கொத்து.

1. விநாயகரகவல்
2. விநாயகர் கவசம்
3. விநாயகர் திருவிரட்டைமணிமாலை
4. மூத்தநாயனார் திருவிரட்டைமணிமாலை
5. மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை
6. காசித்துண்டிவிநாயகர் திருவருட்பா
7. வேழமுகம்
8. விநாயகர் திருவகவல்
9. சித்திவிநாயகர் பதிகம்
10. வல்லைபைக் கணேசர் பிரசாதமாலை
11. கணேசத் திருவருண்மாலை
12. தனித்திருமாலை
13. விநாயகமூர்த்தி பதிகம்
14. விநாயகர் பிள்ளைத்தமிழ்
15. விநாயகர் தோத்திரத் திரட்டு
16. பிள்ளையார் கதை

முதலியன அடங்கியுள்ளன.

பல அழகிய படங்களுடன் நல்ல கிளேஸ் கடிதத்தில் பதிப்பித்து அழகிய கலிகோ பைன்ட் செய்யப்பெற்றது.

விலை ரூ. 1-00.

சரஸ்வதி புத்தகசாலை, செட்டியார்தெரு, கொழும்பு.

# சைவபூஷண சந்திரிகை.

இந்நூல் சைவசமயிகள் ஒவ்வொருவரிடத்திலும் அவசியம் இருக்கவேண்டிய நூலாகும். விபூதி உருத்திராக்ஷம் என்னும் இரண்டு சிவசின்னங்களினது விதிகளும் மந்திரங்களும் பாவனைகளும் கிரியைகளும் தத்துவரகசியங்களும் சந்தியாவந்தன அனுஷ்டான முறைகளும் இன்னும் விபூதி ருத்திராக்ஷங்களைப்பற்றி என்னென்ன அறியவேண்டுமோ அவைகளை எல்லாம் திரட்டி வசன நடையில் வேதம், உபநிடதம், சிவாகமம், உபாகமம், ஸ்மிருதி, புராணம் இதிகாசம் முதலிய நூல்களின் பிரமாணங்களோடு எழுதப்பட்டுள்ளது.

---

இப்புஸ்தகத்தை வாங்கிப் படிப்பவர் விபூதி உருத்திராக்ஷ விஷயங்களில் எல்லாவற்றையும் அறிந்தவராவார்.

---

நல்ல கிளேஸ் கடிதத்தில் பதிப்பித்து அழகிய கலிகோ பைண்ட் செய்யப்பெற்றது.

விலை ரூபா ஒன்று.

அஷ்டாஷ்ட மூர்த்திகளாகிய

# சிவபராக்கிரமம்.

ஒப்பு உயர்வு முதலீறில்லாத சிவபெருமான் தம் அடியார்க்கு அனுக்கிரகஞ்செய்யும்வண்ணஞ் சகளீகரித்த அறுபத்துநான்கு மூர்த்தங்களே சிவபராக்கிரமம் எனப்படும். இவ்வரிய நூலைச் சிறந்த செந்தமிழ் நடையில் இயற்றி அவ்வவ் வற்புதங்களை நேரில் கண்டனபோல் விளக்கத்தக்கதிவ்விய திருவுருவப்படங்கள் சிற்பநூல்விதிவழுவாது எழுதியமைத்து முக்கியமான இடங்களில் வேதம், உபநிஷதம், ஆகமம், புராணம், இதிகாசம் முதலிய பல வடநூல் மேற்கோள்களும், தமிழ்நூல் மேற்கோள்களும் காட்டி அச்சிட்டு அழகாக பயின்ட் செய்யப்பெற்ற இந்நூல் சைவசமயிகள் ஒவ்வொருவரிடமும் இருக்கவேண்டிய தவசியம்.

---

இதில் உள்ள திருவுருவப் படங்கள் பூசிக்கத்தக்கன.

---

அழகிய 64 திருவுருவப் படங்களுடன், உயர்ந்த கிளேஸ் கடிதத்தில் பதித்து, நேர்த்தியான கலிக்கோ பைன்ட் செய்யப்பட்டது.

விலை ரூபா இரண்டு.

### அஷ்டாஷ்ட லீலையென்னும்

# தேவீ பராக்கிரமம்.

சமஸ்தலோக காரணபூதையாய் ஐம்பெருந் தேவர்க்கு உற்பத்திலயஸ்தானமாய் பிரமேந்திராதிகட்கு எய்திய இடுக்கணைக் களைந்தும் அவரவர் இஷ்டசித்தியருளும் கருணாநிதியாய் விளங்கும் சர்வலோகமாதாவாகியபராசக்தியின் லீலா விபூதிகள் தேவீபராக்கிரமம் எனப்படும். இந் நூலைத் தெள்ளிய தமிழ்நடையில் இயற்றி இவ்வற்புதங்களை நேரில் கண்டாற்போல விளங்கத்தக்க அறுபத்து நான்கு திருவுருவப்படங்கள் அமைத்து முக்கியமான இடங்களில் வேதம், ஆகமம், புராணம், இதிகாசம் முதலிய வடநூல் மேற்கோளும் தமிழ்நூல் மேற்கோளுங் காட்டப்பட்டிருக்கின்றன. தேவியின் பிரபாவத்தை உணரும்வண்ணம் ஒவ்வொரு விஷயங்களையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளக்கிக் காட்டியிருக்கிறபடியால் இதைவாசிப்பவர் லோகமாதாவாகிய தேவியின் பிரபாவங்களெல்லாவற்றையும் அறிந்தவராவார் என்பது திண்ணம்.

**அறுபத்து நான்கு அழகிய படங்களுடன் நல்ல கிளேஸ் கடிதத்திற் பதிப்பித்து நேர்த்தியான கலிகோ பைண்ட் செய்யப்பெற்றது.**

**விலை ரூபா 1 சதம் 50.**

சரஸ்வதி புத்தகசாலை, செட்டியார்தெரு, கொழும்பு.

# சுப்பிரமணிய பராக்கிரமம்.

அநாதிமல முத்தபதியாய், கலியுகப் பிரத்தியக்ஷ தெய்வமாய், சிவமும் சத்தியும் சேர்ந்தவடிவினராய் விளங்காநின்ற ஸ்ரீசுப்பிரமணியப்பெருமானது பராக் கிரமங்கள் அளவில்லாதனவாயிருப்பினும், அவைக ளுள் முக்கியமான 88 பராக்கிரமங்களை வடமொழி யிலும் தென்மொழியிலும் உள்ள பலநூல்களை ஆதார மாகக்கொண்டு செந்தமிழ் வசனநடையில் எழுதப் பெற்று இதில் சுப்பிரமணிய சுவாமியினது திருவிளை யாடல்களும், மகிமைகளும், தத்துவங்களும், அவதார விசேடங்களும், ரூபத்தியானங்களும், மூர்த்திபேதங் களும், இன்னும் பல விஷயங்களும் அடங்கியுள்ளன.

நல்ல கிளேஸ் கடிதத்தில் அச்சிட்டு அழகிய கலிக்கோ பைண்ட் செய்யப்பெற்றது.

விலை ரூபாய் இரண்டு.

சரஸ்வதி புத்தகசாலை, செட்டியார்தெரு, கொழும்பு.

# கந்தபுராணச் சுருக்கம்.

(வசனம்—படங்களுடன்)

---

முருகப் பெருமானின் திருவவதாரப் பெருமையை விளக்கிக்கூறும் கந்தபுராணம் சமுத்திரம் போற் பரந்திருத்தலினாலே அதனை யாவரும் எளிதிற் கற்றுணரும்பொருட்டு அதன் சாராம்சங்களை யெல்லாம் சுருக்கி "கந்தபுராணச் சுருக்கம்" என்னும் நூலைச் சம்பந்த சரணாலயசுவாமிகள் பத்தியரூபமாகச் செய்தருளினர். அதனை உலகத்தில் யாவரும் கற்றறியக்கூடிய இலேசான தமிழ் வசனநடையில் படங்களுடன் அச்சிட்டு வெளியிட்டிருக்கிறோம்.

விலை சதம் 50.



சரஸ்வதி புத்தகசாலை, செட்டியார்தெரு, கொழும்பு.

# திருக்குறள்.

[பரிமேலழகருரை-தெளிபொருள் விளக்கப்பதவுரை-விசேஷக் குறிப்புகள் முதலியவற்றுடன்.]

தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் திருவாய் மலர்ந்தருளிய திருக்குறளென்னும் இந்நூலானது 1330 குறள் வெண்பாக்களால் செய்யப்பட்டு பாஷையின் உயர்வை விளக்குவதாயும் சொற்பொலிவு முதலிய பாகுபாடுடையதாயும் இராஜதந்திர முதலிய பலவகைப்பட்ட சிறந்த நீதிநெறியை நன்குணர்த்தத் தக்கதாயும் எல்லாச் சமயிகளானும் இனிதேற்றுக்கொள்ளப் பட்டதாயும் உள்ளது. மேலும் தமிழ்ப்பாஷையில் விருத்தியடைய விரும்புவோர்க்கும் ஏற்ற நூலாகவும் இருத்தலால் இதன்பெருமை குன்றின் மேலேற்றிய விளக்குப்போல் விளங்குகின்றது.

இந்நூல் வேதசாரமாயிருத்தலினால் ஆதியில் உரையாசிரியர் பலர் இதற்கு உரையியற்றினரெனினும் அவற்றுள் பரிமேலழகர் இயற்றிய உரைசொற்பொலிவும் பொருணயமும் நிறைந்து விளங்குவதால் சான்றோர் இவ்வுரையையே மேலாகக்கொண்டு வழங்கிவருகின்றனர். ஆதலால் தமிழ் வேதமாகிய திருக்குறளும் இதற்குப் பரிமேலழகர் செய்த உரையும் கற்றோர்யாவராலும் விரும்பத்தக்கனவே. ஆதலின் இவ்வரியநூல் பரிமேலழகருரையுடனும் தெளிபொருள்விளக்கப் பதவுரையுடனும் விசேஷக்குறிப்புகளுடனும் நல்ல கிளேஸ் கடிதத்திற் பதிப்பித்து அழகியகலிகோ பைண்ட் செய்யப் பெற்றிருக்கிறது.

விலை ரூபா 4-00.

சிறந்த நூல்! குறைந்த விலை!!

# நாலடியார்

## மூலமும்—உரையும்

அரசர், அந்தணர், தாய், தந்தை, ஆசிரியர், நட்பினர், உறவினர், மேலோர், கீழோர், முதலாயினோருடைய தன்மைகளை அறிந்து அவர் மாட்டுத் தக்கவாறொழுகி, இன்மையிலின்பமும் மறுமையில் முத்தியும் பெறும் உபாயவழிகளை உணர்த்தும் இப்பொது நூல் 400 வெண்பாக்களையுடையது. சமண முனிவர்களால் அருளிச்செய்த பதினெண் கீழ்க்கணக்குகளில், இதுவுமொன்று. இதற்குத் தமிழ்ப்புலவர், களத்தூர் வேதகிரி முதலியார் அவர்களியற்றிய உரையுடன், உயர்ந்த கிளேஸ் கடிதத்தில் அச்சிட்டு காலிக்கோ பைண்டு செய்யப்பட்டிருக்கிறது.

கல்வியறிவைக் கோரும் ஒவ்வொருவருக்கும் உயர்தரக்கல்விச்சாலை மாணவர்க்கும், இது மிகவும் உபயோகமானது. சிறந்த நீதிகளைப் புகட்டக் கூடியது.

இதன் விலை ரூபா ஒன்று.

சரஸ்வதி புத்தகசாலை, செட்டியார்தெரு, கொழும்பு.

பதினெண் சித்தர்கள்

# ஞானக்கோவை

3 பாகங்களும் ஒன்றாய்ச் சேர்த்து அச்சிட்டு உயர்ந்த கலிகோ பைண்டு செய்தது.

விலை ரூபாய் 1-25. ஷை கிளேஸ்: ரூபாய் 2.

இதில் அடங்கிய நூல்களாவன:

ஆத்திசூடி ஞானம்
சுந்தரமூர்த்தி ஞானம்
அகஸ்தியர் ஞானம்
கருவூரார் பூஜாவிதி
பாம்பாட்டிச்சித்தர் பாடல்
இடைக்காட்டுச்சித்தர்பாடல்
அகப்பைச்சித்தர்பாடல்
குதம்பைச்சித்தர்பாடல்
அழுகணிச்சித்தர் பாடல்
கடுவெளிச்சித்தர் பாடல்
கந்தீஸ்வரர் பூஜாவிதி
இராமதேவர் பூஜாவிதி
அகஸ்தியர்ஞானம் (வேறு
ஞானக்கும்மி
சிவவாக்கியர் பாடல்
பட்டினத்தார் புலம்பல்
அகஸ்தியர் ஞானம்
ஷை தனி ஞானம்
ஞானோபதேசம்
அகஸ்தியர் சுத்தஞானம்
வால்மீகர்சுத்தஞானம்
திருமூலநாயனார் ஞானம்
சட்டமுனி ஞானம்
சுப்பிரமணியர் ஞானம்
காயக்கப்பல்
பட்டினத்தார் ஞானம்
வாலைக்கும்மி
பத்திரகிரியார் புலம்பல்
ஞானரத்தினக் குறவஞ்சி
உடலறி விளக்கம்
நெஞ்சறி விளக்கம்
ஞானவெற்றம்
சிவானந்தபோதம்
பரமானந்தபோதம்
உயர்ஞான சரநூல் சாஸ்திரம்
சிவநாமாவளித் திரட்டு
காகபுசுண்டர் ஞானம்

# நாலாயிர திவ்ய பிரபந்தம்.

கண்ணைக் கவரத்தக்க 14 அழகிய கலர் திருவுருவப் படம் ஐதீகப்படி சேர்க்கப்பட்டிருக்கின்றன.

பரமபதத்தில் நிரதிசயாநந்தனாய் ஸ்ரீபூமி நீளைகளோடு எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் உலகத்திற்றோன்றி நற்கதியடையும் மார்க்கம் காணாது வருந்தும் மானிடர்கள் உஜ்ஜீவிக்கவேண்டி ஸ்ரீ வத்ஸ கௌஸ்துவபவை ஐயந்தி வனமாலிகைகளையும் ஸ்ரீ பூதநீளைகளையும் ஸ்ரீ பாஞ்சாயுத ஆழ்வார்களையும், ஆநந்த கருட விஷ்வக்சேன பாக்ருதிகளையும் ஆழ்வார்களாக அவதாரம் செய்வித்து அவர்களால் திராவிட வேதரூபமாகிய இந்தத் திவ்யப் பிரபந்தங்களை வெளிவரச் செய்தாராதலால், பகவத்குணங்களை ஆஸ்வயித்துப் பாராயணஞ்செய்ய இது மிகவும் அவசியமானது. இதில் பன்னிரு ஆழ்வாராசாரியர்களுடைய சரித்திரங்களும் அவர்களுடைய திருவுருவப் படங்களும் சேர்த்துப் பாடல்களின் பண்கள் பிரித்து இராக தாளங்களும் குறிக்கப்பட்டிருக்கின்றன.

நல்ல கிளேஸ் கடிதத்தில் பதிப்பித்து அழகிய கலிகோ பைண்ட் செய்யப்பெற்றது.

விலை ரூபா **4-00.**

# அருணாசல புராணம்.

பஞ்சபூதத்தலத்து ளொன்றாகிய திரு அண்ணாமலையின் மான்மியமடங்கிய 14-சருக்கங்கள் கொண்ட அருணாசல புராணம் மூலமும் உரையும் 20-ஐதீக உருவப் படங்களுடன் வெளியாக்கப்பட்டிருக்கிறது. இதில் சமயாசாரிகளின் தேவார திருவெம் பாவைகளும் கிரிப்பிரதட்சண விதிகளும், கார்த்திகை தீபச்சிறப்பும் வல்லாலமஹாராஜன் சரித்திரம், குருநமச்சிவாயர் சரித்திரம் அவர் அருளிச்செய்த அருணகிரி யந்தாதி, அண்ணாமலை வெண்பா முதலியவைகளுடன் திருவருணை யந்தாதி, திருவருணைக்கலம்பகம் சோணசைல மாலை, சோணாசல வெண்பா, உண்ணாமுலையம்மன் பதிகம், சதகம், முதலியன சேர்க்கப்பட்டிருக்கின்றன.

823-பக்கங்கள் கொண்டது உயர்ந்த காலிகோ பைண்டு

**விலை ரூபா 1-50**

# சிவமஹா மந்திரம்

ஆயிரத்தெட்டு சிவாலயங்களின் பெயர்களும், ஆயிரத்தெட்டு சிவநாம அஷ்டோத்திரமும், அர்ச்சனையும், சிவ பஞ்சாட்சர மூலமந்திரமும், வீடுகளிலும், வியாபார சாலைகளிலும், லக்ஷ்மீகர முண்டாவதற்கு (ஸ்தாபிக்கக்கூடிய) ஸ்தூல பஞ்சாட்சர வசியச்சக்கரம், தங்கத் தகட்டிலாவது, வெள்ளியிலாவது பஞ்சலோகத்திலாவது எழுதிக் குளிசமாடித் தேகத்திலணிவதற்குச் சூட்சும பஞ்சாட்சர சக்கரம் இவைகள் செய்முறையும், இதற்கு மந்திரம் உருவு பூசை இவைகளின் விபரமும், ஸ்ரீமகா கணபதி மூலமந்திரம், அஷ்டோத்திரம், வசியச் சக்கரம் இவைகளும் அடங்கியுள்ளன.

**விலைசதம் 40**

# மூவர் அடங்கன் முறை.

இவ்வருமையான புத்தகம் ஒவ்வொரு சைவர் வீட்டிலும் அவசியம் இருக்கவேண்டியது. இவ்வடங்கன் முறையினது பிரபாவமும் அருமையும் அளவிடுதற் கரியது. இதனை ஒவ்வொருவரும் அனுட்டான விதிப்படி சிரத்தையோடு பாராயணம் பண்ணி வருவாராயின் இஷ்ட காரியார்த்தங்களை எளிதில் அடையக்கூடுமென்பது பெரியோர் துணிபு.

பிறவிப் பெருங்கடல் நீந்துதற்கு ஓர் அரும் பெருந் தெப்பமாயும், சைவ சமயத்துக்கோர் திலகமாய் விளங்கும் இத்துணை அரிய பெரிய நூலை அச்சிடாது வாளா இருத்தல் சைவ சமயத்தினருக்கே மிகவும் இழிவைத்தருமென்பது கருதி அதிகச் செலவிட்டு ராயல் 8 பேஜ் சைசில் புதிய எழுத்துக்களால் சரித்திரக்குறிப்பு, ஸ்தலக்குறிப்பு, இராகம் முதலியன பிரித்து உயர்ந்த கிளேஸ் கடிதத்தில் அழகாக அச்சிட்டிருக்கிறோம். கொஞ்சம் பிரதிகளே அச்சிட்டதால் சீக்கிரம் முந்திக்கொள்வோர்க்கே கிடைக்கும்.

திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மூவரும் பாடிய தேவாரங்கள் முழுமையும் அடங்கிய பெரிய புத்தகம்.

**நல்ல கிளேஸ் கடிதத்திற் பதிப்பித்து அழகிய கலிகோ பைண்ட் செய்யப் பெற்றது.**

**விலை ரூபா 5-00**

# யோகவித்யா

## என்னும் முக்தி சோபனம்

23-யோகாசன படங்களுடன் கூடியது.

புருஷார்த்த சாதனங்களுள் முக்கியமானது யோகமென அறிஞர் பலர் அறிந்திருந்தும் சாதகம் செய்வது மிகக் கஷ்டமென்று சிலர் விட்டுவருகின்றார்கள். லோகோபகாரமாக இவ்வருமையான நூல் யாவரும் மிக எளிதிற் சாதகம் செய்யுமாறு வடமொழியினின்று சில பிரமாணங்களை எடுத்து நான்கு அத்தியாயத்தில், பக்தி, சிரவணம், ஸ்மரணை முதலிய லக்ஷணங்களும் அவற்றின் வேறுபாடுகளை இருபத்திமூன்று யோகாசன படங்களால் விவரித்துக் காட்டியும்; இரண்டாம் அத்தியாயத்தில் பிராணாயாமம், பிரத்தியாகாரம் இவற்றின் லக்ஷணங்களும்; மூன்றாம் அத்தியாயத்தில் ஞானயோக இராஜயோக லக்ஷணமும்; நான்காம் அத்தியாயத்தில் பரமார்த்த தத்துவ விளக்கத்தின் துறவு லக்ஷணங்களும் பல உவமானங்களால் விளக்கப்பட்டிருக்கின்றன. இதுவரையிலும் இம்மாதிரி யோகநூல் வெளிவந்ததில்லை.

விலை ரூபா ஒன்று.



விவேகாநந்த சுவாமிகள்
உபந்நியாஸங்களடங்கிய

# ஞானத்திரட்டு

விவேகாநந்த சுவாமிகளின் சரித்திரம், அவர் செய்த அற்புதமான பிரசங்கத்திரட்டும் சுவாமிகளின் திருவுருவப் படத்துடன்.

இதில் சுவாமிவிவேகாநந்தர் அமெரிக்கா சிகாகோ மஹா சபையில் கர்மயோகம், ஞானயோகம், பக்தி யோகம் என்னும் அரிய விஷயங்களையும் அரிய மதத்தின் உண்மைப் பொருளையும் வெற்றியுடன் நிலை நாட்டி ஆங்கில பாஷையில் செய்த பிரசங்கத்தை ஸ்ரீமான் வி. நடராஜ ஐயரால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது.

இதிலடங்கிய விஷயங்கள்:-

| | |
|---|---|
| யதார்த்த மனிதன் | நன்மை தீமை |
| போலி மனிதன் | முத்தி |
| சிகாகோ முதற் பிரசங்கம் | பக்தி |
| இந்துமதம் | பக்தியோகம் |
| கர்மயோகம் | ஆசாரியன் அவசியமென்பது |
| இல்லறம் துறவறம் | பரபக்தி |
| விக்கிரகாராதனை | இராஜயோகம் |
| கடமை | மாயையைப்பற்றிய கதைகள் |

விலை ரூபா 1-00

ஸ்ரீ சிவசுப்பிரமணியக்கடவுள் திருவருள் பெற்ற

அருணகிரிநாத சுவாமிகள்

# திருப்புகழ் மெய்ஞ்ஞான விருத்தியுரையுடன்

[காலிகோ பைண்டு செய்தது]

'திருப்புகழ்' என்னும் செஞ்சொற் பிரபந்தம், கருணையங்கடலாகிய அறுமுகக் கடவுளின் அன்பிற் குகந்த தோத்திரம் என்பது உலகப்பிரசித்தம்.

இந்நூலாசிரியரான அருணகிரிநாத சுவாமிகள் இயற்றிய திருப்புகழ்ப்பாடல்கள் படிப்பாருள்ளத்தை யும் கேட்பாருள்ளத்தையும் பரவசப்படுத்திப் பேரா னந்தப் பெருக்கில் ஆழ்த்தும். இச் சிறப்புவாய்ந்த பாடல்களில் முதல் 100 பாடல்களுக்கு எஸ். பி. ஜி. காலேஜ் தமிழ்ப் பண்டிதர் திருவாளர் அமிர்தம் சுந்தர நாதம் பிள்ளை அவர்களால் பல சாஸ்திர மேற்கோளு டன் மெய்ஞ்ஞான விருத்தியுரை தலைமைப் பெயருடன் விரிவானவுரை எழுதப்பெற்றுள்ளது. ஒவ்வொரு பாடல்களின் தலைப்பிலும் சந்தக் குறிப்புகள் சேர்த் தும், அரும்பதப்பொருள் விளக்கியும் உதவப்பெற்று சுத்தப்பிரதியாய் வெளியிடப்பட்டிருக்கிறது.

விலை ரூபா 2-00

# ஸ்தோத்திரத் திரட்டு.

தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப் பல்லாண்டு, திருப்புராணம், திருப்புகழ், திருமொழி, திருமந்திரம், பதினொராந்திருமுறை, இராமலிங்க சுவாமி பாடல், கந்தரலங்காரம், கந்தரனுபூதி, திருப் பேரூர்ச் சன்னிதிமுறை, திருச்செந்தூர்ப்பிள்ளைத் தமிழ், சுப்பிரமணியசுவாமி விருத்தம், தாயுமான சுவாமிபாடல், பட்டினத்துப்பிள்ளையார் பாடல் முத லியவற்றினின்றும்

அரிய ஸ்தோத்திரப் பாக்களும்

திருப்பள்ளியெழுச்சி, திருவெம்பாவை, திருப்பொற் சுண்ணம், விநாயகர் அகவல், விநாயக கவசம், கந்தர் சஷ்டிகவசம், சிவகவசம், சத்திகவசம்

முழுவதும்

ஆலயதரிசன விதியும், நால்வர் சரித்திரமும், இன் னும் சைவ சமயிகளுக்கு இன்றியமையாத பல அரிய விஷயங்களும் அடங்கியுள்ளது.

அழகிய படங்களுடன்
நேர்த்தியான பைன்ட் செய்யப்பெற்றது.

விலை { சாதாரணப் பதிப்பு — சதம் 50 (அணா 8)
கிளேஸ் கலிகோ — ரூபாய் ஒன்று }